**Sri A. VEDARATHNAM :** தஞ்சை ஜில்லா பாசனப் பகுதிகளில் உள்ள இடங்களில் மிகவும் நன்றாக விளைகிற "வெரைட்டி ", இந்த கட்டாம்பாளை என்ற நெல். அவைகளில், இதுவரையிலும் இந்தப் பரீட் சார்த்த முறைகளின் பலனாக அந்தப் பூச்சிகள் கட்டுப்படவில்லை. அதனால் ஏராளமான நஷ்டம் வந்து விவசாயிகள் அந்த வெரைட்டியையே விட்டு விட வேண்டிய நிலை வந்திருக்கிறது என்பது அரசாங்கத்திற்கு தெரியுமா ? அப்படியானால் அந்தப் பூச்சிகளை கண்ட்ரோல் செய்ய வேறு புதிய முயற்சிகள் ஏதாவது எடுத்துக்கொள்ளப்படுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** இதைப் பற்றி ஆராய்ச்சி மேலும் செய்யப்பட்டுவருகிறது என்று நான் முன்பே சொன்னேன், ஆனால் அடியோடு இவர்கள் இந்தப்பயிரையே மாற்ற வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது என்ற விவரம் அரசாங்கத்தினிடம் இல்லை.

**Sri M. C. MUTHUKUMARASWAMI :** இந்தப் பூச்சிகளை அழிப்பது என்பது, மிராசுதார்கள் அரசாங்கத்திற்குத்தெரிவித்த பிறகுதான் அதைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்கிறார்கள். அல்லது அரசாங் கமே அதிகம் உத்தியோகஸ்தர்களைப் போட்டு பூச்சிகள் எங்கு எங்கு அதிகம் இருக்கிறது என்று கண்டுபிடித்து அதற்கு சிகிச்சை செயய அரசாங்கம் முன்வருமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** இவை, விவசாயிகள் பயிர் செய்கிற நிலம். விவசாயிகள்தான் முதலில் கவனம் எடுத்துக் கொண்டு அதைச் சொல்ல வேண்டியது. அதைச் சொல்லாமல் அவர் களைக் கேட்காமல் அவர்கள் நிலத்தில் ஒன்றும் செய்ய முடியாது.

*D.P.M. Course, Bangalore*

* 371 *Q.*—Sri K. VINAYAKAM (on behalf of Srimathi T. N. Anandanayaki) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether any doctors have been deputed by our Government to undergo D.P.M. Course at Bangalore; and

(*b*) if not, why?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** (*a*) Yes.

(*b*) Does not arise.

**Sri S. LAZAR :** I would like to know what is meant by this D.P.M. Course.

**The Hon. Sri M. A. MANICKAVELU :** Diploma in Psychological Medicine.

*Temple lands*

* 372 *Q.*—Sri A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ஆலயங்களுக்குச் சொந்தமான நிலங்களில் வீடு முதலிய கட்டிடங்கள் கட்டியவர்களை அப்புறப்படுத்தாமலிருக்க அரசாங்கத்திற்கு ஏதேனும் உத்தேசம் உண்டா ?

(ஆ) அப்படியானால், அதன் விபரம் என்ன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** (*a*) No, Sir.

(*b*) Does not arise.

20th September 1958]

**Sri K. ANBAZHAGAN** : கோவில் நிலங்களில் பல வருட காலமாக, மதவேறுபாடு கருதாமல் பல்வேறு சமுதாயத்தைச் சார்ந்தவர்களுக்கு குடியிருக்க இடம் கொடுத்து வந்ததற்குமாறாக இப்பொழுது வேறு மதங்களைச் சார்ந்தவர்களான முஸ்லிம்கள், கிருஸ்தவர்கள் ஆகியோர்களை அங்கிருந்து வெளியேற்ற முயற்சி நடைபெறுவது அரசாங்கத்துக்குத் தெரியுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அப்படி அரசாங்கத்திடம் தகவல் இல்லை. ஆனால் இந்த விஷயங்களெல்லாம், இருக்கிற சட்டப்படி நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டால் அதற்கு குறுக்கே நாம் ஒன்றும் செய்ய முடியாது.

*Local Development Works*

* 373 *Q.*—**Sri V. K. KOTHANDARAMAN** : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the amount allotted for Gudiyattam taluk under Local Development Works Programme during 1957–58;

(*b*) the date of allotment of the amount;

(*c*) the amount spent up to 31st March 1958; and

(*d*) the amount remaining unspent?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : (*a*) Rs. 98,860.

(*b*) 12th September 1957.

(*c*) Rs. 71,346·54 nP.

(*d*) Rs. 27,513·46 nP.

**Sri V. K. KOTHANDARAMAN** : ஸார். இது போன்று ஒவ்வொரு ஆண்டிலும் நான்கு, ஐந்து மாதங்களுக்குப் பின்னால் பணத்தை ஒதுக்குகின்ற காரணத்தால் அதே ஆண்டு மார்ச் மாதம் 31-ம் தேதிக்குள் முடிக்கவேண்டும் என்று எண்ணி அவசர அவசரமாக இந்த அபிவிருத்தி வேலைகளை செய்வதால், இந்த வேலைகள் நல்ல முறையில் நடப்பதில்லை. அது மட்டுமல்ல, பணமும் மிச்சப்படுகின்ற நிலைமை ஏற்படுகின்றது. ஆகவே வருட ஆரம்பத்திலேயே பணத்தை ஒதுக்குவதற்கு அரசாங்கம் முயற்சி எடுக்குமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இப்போது மார்ச் மாதம் 31-ம் தேதிக்குள் முடிக்க வேண்டும் என்று விதி இல்லை. ஒதுக்கின பணத்தைக் கொண்டு இந்த ஆண்டிலும் தொடர்ந்து வேலை நடத்தலாம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

*Price of Petrol*

* 374 *Q.*—**Sri A. A. RASHEED** : Will the Hon. the Minister for Home be pleased to state whether the attention of the Union Government has been drawn by the Madras Government to the rise in the prices of petrol and petroleum products such as d· sel oil, tar, motor oil, etc.?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : No, Sir.

**Sri A. A. RASHEED** : Is it a fact that oil companies have reduced their prices for petrol and petroleum products and if so, will the Government recommend to the Union Government that the reduction be passed on to the consumers?